# தஞ்சை சமஸ்தான

## சரித்திரம்.



இஃது




மாயவரம் டி. மு. கோர்ட்டு வக்கீல்

A. நடேசபிள்ளை யவர்களால்

இயற்றப்பட்டு,

A. N. S. R. கம்பெனியாரால்

சென்னை

"வர்ணீபூஷணம்" பிரஸ்ஸில்

அச்சிடப்பட்டது.

1909.

# தஞ்சை சமஸ்தான



## சரித்திரம்.

### III. அத்தியாயம்.

கலியுகம் 4600-வருடத்தில் கலிவிஜயநாய்க்கர் என்ற அரசர் சோழதேசத்தை யரசாளவேண்டுமென்பதாக இத்தேசத்துக்கு வந்து 5-பெரிய பட்டணங்கள் யேற்படுத்தி தஞ்சைக்கு வந்தவுடன் ஒரு கெருடன் வட்டமிட்டது. அதைப் பார்த்து அவ்விடத்தில் விசேஷமிருக்குமென நினைத்து அக்கெருடன் எதுவரையில் வட்டமிட்டதோ அந்த வட்டத்துக்குச் சரியாக அகிழ்மதில்கள் கட்டச்செய்ததுமன்றி கோட்டை கொத்தளங்கள் அரன்மனை முதலியனவும் சிவாலயவிஷ்ணுவாலயங்களுங் கட்டச் செய்தார். கெருடனைப் போலவே கோட்டைகள் கட்டச்செய்தார். இவர் 45-வருடமும், இவர் மகன் 24-வருடமும்; இவர் மகன் விஜயரெங்கன் 30-வருடமும், அரசாண்டார்கள். இவர் காலத்தில் துருக்கர்படை மேலிட்டு சண்டைசெய்ய தோர்வையடைந்து பின்பு ருஜியாகி காஞ்சீபுரமுதல் கொள்ளடம் வரையிலுள்ள வடநாட்டை கப்பணத்துக்கிடாக கொடுத்துவிட்டு காவேரியாறு பாச்சலுள்ள தேசங்களைபட்டில் அரசாண்டார். துருக்கர் படைக் கரசராகிய நவாப் இங்கிலீஷ் கம்பெனியில் கடன்வாங்கியிருந்தார். இக்கம்பெனியார் காவேரியாற்று பாச்சலுள்ள நிலங்கள் மிகுந்த செழுமையா

னதாகையால் விஜயரெங்கராஜரிடம் மிகுதியாய் பணமிருப்பதாக நவாப்புக்குத் தெரிவித்தார்கள். இதுவிஷயத்தைக் கேழ்விப்பட்ட நாய்க்கர் தனக்கு துணையாவோரைச் சேர்த்துக்கொள்ளவேணுமெனத் தீர்மானித்து 18-கம்பெனிகளில் யார் மிகுந்த யோக்கியதையுடையவரென விசாரித்து, போர்சிகல் தேசத்தார் நல்லவர்களென்த் தெரிந்து அவர்கள் கப்பல் நாகைதுறை முகத்தில் வரப்போக விருக்கும்படி யுத்திரவு கொடுத்தார். இவ்விதம் இடங்கொடுத்தது கலியுகாதி 4712-ம் வருடத்தில். மற்ற கம்பெனியார் பகையுமில்லாதிருக்க விரும்பி விஜயரெங்கராஜன் மகன் விஜயராகவராஜன் 8-வருடம் கிரமித்து தரங்கம்பாடியில் டேன்ஸ்காரர் தங்கி வியாபாரஞ்செய்யும்படி அநுமதி கொடுத்தார். பிறகு 12-வருடங்கழித்து காரைக்கால் பட்டணத்தில் பிரான்ஸ் தேசத்தார் வியாபாரஞ்செய்யும்படி அநுமதி கொடுத்தார். போர்சிகல் தேசத்தார் 24-வருடம் நாகையில் வியாபாரஞ் செய்தபின் அன்னகரை உலாந்தக்காரரிடம்கொடுத்துவிட்டு போய்விட்டார்கள். இந்த விஜயராகவ நாய்க்கர் விஷ்ணுவாலயங்களையெல்லாம் சிறப்பிக்கவேண்டுமென்றவெண்ணமே விட்டு, விஷ்ணுகோவில்களில் சிறந்ததாக விருந்த ராஜமன்னார்கோவிலுக்கு விசேஷ திருப்பணிகளும் உற்சவாதிகளும் நடத்தச்செய்ததுமன்றி சிவன்கோவில் ஸ்வாமிகளையெல்லாம் மிகுந்த தாழ்வுபடுத்தவேண்டுமென்ற கெட்ட வெண்ணத்துடன் ஷை பெருமாள் கோவில் உற்சவம் நடக்கும்போது தஞ்சை சமஸ்தானத்திலுள்ள சிவன்கோவில் ஸ்வாமிகளை ஷை ருஜமன்னார் கோவிலுக்கு தூக்கிவரச்செய்து பெருமாளுக்கு அடியார்கள்போல் அச்சுவாமிகளை பின்னால் கொண்டுபோகும்படி யுத்திரவு செய்தார். அப்போது வைத்தீஸ்வான்கோயில் முத்துக்குமாரஸ்வாமியும் ஷை ராஜமன்னார்

கோயிலுக்குக் கொண்டுவரப்பட்டது. இந்த ஸ்வாமியிடத்தில் பிசாசு பிடித்தவர்களெல்லாம் வந்து ஆடினார்கள். இந்த ஆச்சரியத்தைப் பார்க்க எல்லா ஜனங்களும் இந்த ஸ்வாமியிடம் வந்ததுமன்றி முத்துக்குமாரஸ்வாமியை யெல்லோரும் பக்திசிரெத்தையாகப் போற்றினார்கள். பெருமாளிடத்தில் ஜனக்கூட்டமே கிடையாது. இதைப்பார்த்த இராஜா மிகவும் அவமானமடைந்து இனி இந்த பிசாசுச்சாமிகளை தூக்கிவரவேண்டாமென்று உத்திரவு கொடுத்துவிட்டார். இந்த அரசர் காலத்தில் சிவன்கோவில்களெல்லாம் பாழடைந்தன.

கலியுகம் 4770-வருஷத்தில் யோகோஜி என்ற மகாராஷ்ட்ர அரசன் தனது படைகளுடன் தஞ்சாவூர்கோட்டையை நான்கு புறத்திலும் வளைத்துக்கொண்டு முற்றுகை போட்டார். இதைக்கண்ட விஜயராகவ நாய்க்கர் திருத்துழாய் என்னும் துளசிகளை கூடைகூடைகளாகப்பரித்துவரச் செய்து, நான்கு கோட்டை வாசற்படிகளிலுங் கொட்டச் செய்தார். மகாராஷ்ட்ரபடைகள் அவைகளுக்கு எவ்வளவேனும் பயப்படாமல் அவைகளை மிதித்துக்கொண்டு கோட்டைக்குள் நுழைந்துவிட்டார்கள். உடனே விஜயராகவ நாய்க்கர் தன் பெண்டீர் பிள்ளைகளனைவரையும் ஓர் மருந்தறையில் போட்டு கொளுத்திவிட்டு மேலவீதி மார்க்கமாக வோடினார். அவரை மராட்டியர் தலைவேறு கால்வேறாக வெட்டி யெறிந்துவிட்டார்கள்.

பின்பு இந்த யேகோஜிராஜா தஞ்சை சமஸ்தானத்தை யரசாட்சி புரிந்தார். இவர் காலத்தில் இந்த சமஸ்தானமெங்கும் தடாகங்கள், அன்னசத்திரங்கள், மடங்கள், தண்ணீர் பந்தல்கள்; தேவாலயங்களுக்கு திருப்பணிகள், வேதபாடசாலைகள், முதலிய பலவித தர்மங்களைச் செய்துவந்தார்.

மேலும், சோழராஜாக்கள் காலத்தில் எந்தெந்த தருமங்கள் எந்தெந்த திட்டப்படி நடந்துவந்தன வென்பதைப்பற்றி பழய கணக்குகளைக் கொண்டு சோதிக்கச் செய்து அதேதிட்டப்படி தருமங்கள் நடக்கும்படி திட்டஞ்செய்ததுமன்றி அந்தந்த மாதங்களுக்குதருமச்செலவுகளுக்கு வேண்டிய தொகைகளை முதல்மாதத்திலேயே கொடுத்து விடும்படிக்கும் உத்திரவுசெய்தார். ஜீர்ணமாகப்போன கோவில்களையெல்லாங் கட்டும்படி யேற்பாடுகள்செய்தார். இவர் இளையகுமாரன் சாகாஜிமகராஜா கோவில்களுக்கு வேண்டிய பொன்களெல்லாம் கொடுத்துவந்தார்

திருவாரூர் கோவிலுக்கு, தூர்வாசரிஷி மடமென்னும் பெரியமடத்திலிருக்கும்பிராமணச்சாமியார் தர்மகர்த்தாவாக விருந்தார். இவர் மகராஷ்ட்ர அரசரிடஞ்சென்று திருவாரூர் க்ஷேத்திர மகிமைகளைத் தெரிவித்து கோவில்ச்செலவுகளுக்கு பொன்னனுப்பி வந்தால் அதுசரியானகாலத்தில் வந்து சேராது பொன்கொண்டு வருபவர்களை திருடர்மறித்துக் கொள்ளையடிப்பார்கள், அதனல் பூஜைமுதலியன நின்றுபோய்விடும், பூஜை நின்றுவிட்டால் ருஜாங்கத்துக்குக் கெடுதியுண்டாகுமென ஆகமங்கள் முறையிடுகின்றன, ஆதலால் பொன்கொடுப்பதைநிறுத்தி மானியமாக பூமிகள் கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுக்கும் பட்சத்தில் அபிஷேகம் நைவேதனம் ஆராதனைகள் சரிவரநடக்குமெனச் சொன்னர். அவர் கேட்டுக்கொள்ளுதலின்படி அரசர் 400 வேலி நஞ்சை புஞ்சைநிலங்கள்விட்டு அதற்கு அபிஷேகக்கட்டளை நிலமெனப் பெயர்கொடுத்தார். அந்தகட்டளை நிலங்களின் விசாரணை அன்னியரால்செய்யப்பட வேண்டுமென்றும்கோவில் காரியங்களெல்லாம்பெரியமடத்து சாமியாரால் நடத்தப்படவேண்டுமென்றும், குருக்கள்முதல் குப்பவாரிவரையில்

சகல கோவில் சிப்பந்திகளும் கோவில் கொத்தர், தாசி பெரியமேள அசாமிகள் யாவரும்ஷை சாமியாரால் நியமிக் கப்பட்டு அவருக்குட்பட்டு நடக்கவேண்டுமென்றும், அர்த் தஜாமமானபிறகு கோவிலுள்ள அறைகள் ஸ்வாமிகள் சன் னதிகள் இவைகளெல்லாம் பூட்டப்பட்டு சாவிகளெல்லாம் ஷைபெரியமடம் சாமியாரிடம் ஒப்பிவிக்கப்படவேண்டியதெ ன்றும், ஆக்ஞாபித்தார். பின்பு கலியுகம் 4790 வருடமு தல்உற்சவாதிகள்சிறப்பாய் நடத்தப்படவேண்டியதென்றும் அக்காலங்களில் நடத்தப்படவேண்டிய அன்னதானச் செல வுகளுக்கு இந்த சமஸ்தானத்திலுள்ளவர்களனைவரும் ஏர் 1-க்கு குறுணிநெல்வீதங் கொடுத்துவரவேண்டியதென்றும் சாகாஜிமகராஜா உத்திரவுசெய்தார். இவ்விதம் 5 வருடகா லம் உற்சவம் நடந்தது. இவர்குமாரர் சருவராஜன் இச்கோ விலுக்கு சகல திருவிழாக்களும் நடத்தி கோவில்சட்டதிட்ட ங்களையும் கவனித்து பகல் இரவு இரண்டு காலங்களிலும் ஜாஸ்தியான திட்டங்களேற்படுத்தி முன்திட்டம் போக ஜாஸ்தி திட்டப்படி பூஜை நைவேதன முதலியன நடத்தப் படவேண்டியதற்காக இருநூறு வேலி நிலம் ஸ்வாமிபே ரால் சர்வமான்னியஞ் செய்து, அதற்கு சர்வராஜாகட்டளை என்றும் பெயர்கொடுத்தார். பிறகு கலியுகம் 3800 ல் மேற்படி இரண்டுகட்டளை தருமங்களுஞ் சேர்ந்து பங்கு வீதமாக நடத்தவேண்டுமென்பதாக. ஒவ்வொரு தருமங் களிலும் அபிஷேககட்டளை இரண்டுபங்கு சர்வராஜன் கட் டளை ஒருபங்கு இந்த வீதப்படி நடத்திவரும்படி திட் டஞ் செய்தார்.

ஸ்ரீ தியாகேசன் தெரிசனத்துக்கு வருபவர்கள் சாப் பாட்டுக்கு கஷ்டப்படாதிருப்பதற்காக மேற்கண்டவிதம் ஏர் 1 க்கு குறுணி நெல்வீதம் வசூலித்துவந்த நெல்லை

கொண்டு அன்னதானச் செலவுகள் நடந்தன. இதற்கு 9 வருடங் கிரமித்து தொண்டமான் ராஜா ஸ்ரீ தியாகேசனை தெரிசிக்கவந்தகாலத்தில் தஞ்சை சமஸ்தானத்திலுள்ளவர்கள் ஏர் 1-க்கு குறுணி நெல்வீதங் கொடுத்து அன்னதானச் செலவுகள் செய்துவருவதை தெரிவித்து அந்தப்படியே தொண்டமான் சமஸ்தானத்திலுள்ளவர்களுங் கொடுத்துவரும்படி உத்திரவு செய்யவேண்டுமென்று திருவாரூர் சிவபக்தர்கள் கேட்டுக்கொண்டார்கள். அந்தப்படி தொண்டமான்ராஜா தனது இராஜ்ஜியத்தில் காணி 1-க்கு 3 துட்டு விதம் கொடுத்துவரும்படி திட்டஞ்செய்தார். துக்கோஜி மகாராஜாவின் மந்திரியாகவிருந்த சொக்கப்பா முதலியார் கோவிலுக்கு ஸ்திரமாக மோகனித்தொகை கொடுத்துவரவேண்டுமென்று ஷை ராஜாவைக்கேட்க அவர்கள் அந்தப்படிகலியுகாதி 4832-ம் வருடத்தில் வருடம் 1-க்கு 6000 பொன்வீதம் மோகனித்தொகை கொடுத்துவரும்படி உத்திரவுசெய்தார். ஷை திருவாரூரில் வேதபாடகசாலையேற்படுத்தவேண்டுமென்றும், மடங்கட்டி அன்னதானங்கள் செய்துவரவேண்டுமென்றும் ஷை முதலியார் மகாராஜாவிடங் கேட்டுக்கொண்டார். அந்த இராஜா இறந்துவிட்டபடியால் அவர் மனைவியிடந்தெரிவிக்க அந்த ராஜபத்னி ஷை தருமங்கள் நடத்துவதற்கு என்ன வேண்டுமெனக் கேட்டார்கள். பூஸ்திதியாகக்கொடுக்கவேண்டுமென முதலியார்சொன்னார். உடனே கலியுகம் 4838-ம் வருடத்தில் அன்னதானம் வேதபாடகசாலைக்கு ஓர் பெரிய மடங்கட்டிவைத்து திருவாரூருக்கு சமீபமாயுள்ள விளமல் கிராமமுதல் விபுலைப்படுகைவரையில் 180 வேலி நிலம் சர்வமான்னியமாகக் கொடுத்தார்கள். அந்த மடத்துக்கு துறவி யொருவரை யேற்படுத்தி ஷை அன்னதானம் வேதபாடகசாலை தருமங்கள் நடந்தன.

அக்காலத்தில் ஷை தலைச்சுடிஞனாகிய முதலியாருக்கு ஷை பெண்ணரசியால் பதக்கமுங் கொடுக்கப்பட்டது, இதற்கு 13-வருடங்கழித்து பிரமோதூத வருடம் சித்திரைமாதம் 11 வெள்ளிகிழமைதினம் ஸ்ரீ தியாகேசனை தெரிசிப்பதற்காக வந்த சேதுபதி ராஜாவைக்கண்டு அன்னதானமுதலிய தர்மங்களுக்கு பூஸ்திதிகள் கொடுக்கவேண்டுமென கோவில் தர்மகர்த்தா கேட்டுக்கொண்டார். அவர் அந்தப்படி நாதன் வயல் பிராணன்வயல் என்ற இரண்டு கிராமங்களையும் அன்னதான தருமச்செலவுகளுக்கும், பனங்தோப்பு ஏரிவயல் என்ற இரண்டுகிராமங்களையும் ஷை கோயில் பூஜை யாராதனைச் செலவுகளுக்குங் கொடுத்தார்.

தஞ்சைராஜர்குமாரத்தி பாலியவிதவையாகிய பாலாபாயி அம்மாள் திருவாரூர்கோவிலில் தன்பேரால் சிலதருமங்கள் நடத்தப்படவேண்டுமென தன் பிதாவைக் கேட்டுகொண்டதின்பேரில் 20 வேலிநிலம் சர்வமான்னியப்விட்டு அதன் வருப்படியில் பேர்பாதியைக்கொண்டு அபிஷேக நைவேதன முதலியன நடத்திவரும்படிக்கும், மற்ற பேர்பாதியைக் கொண்டு பிறதிதினமும் 12 பேர்பிராமணர்களுக்கு அன்னப்போட்டு வரும்படிக்கும் திட்டமேற்படுத்தி ஷை கட்டளை விசாரணைக்கு பாலிய விதவிதுறவியாக விருப்பவளை தர்மகர்த்தாவாக விருக்கவேண்டுமென ஓர் பிராமண துறவிவிதவியை ஷை கட்டளைவிசாரணைக்குநியமித்தார். பிறகுசில்லரையாக 8 கட்டளைகளேற்படுத்தி அவைகளுக்கு 10-வேலி நிலம் சர்வமான்னியஞ் செய்து அக்கட்டளைகளின் விசாரணைக்கு பண்டாரியொருவரை தர்மகர்தாவாக நியமித்தார்.

இதற்கு 3 வருடங்களுக்குப் பிறகு துருக்க அரசரின் குருமார்கள் திருவாரூர், தியாகருஜர், சிதம்பரம் நடருஜா திருக்குடந்தை திருவையார் திருக்கடையூர் இக்கோவில்

களின் ஸ்வாமிகள், தங்கத்தால் செய்யப்பட்டிருக்கின்றன வென்றும், அவைகளைக் கொண்டுவரச் செய்தால் விசேஷ லாபமிருப்பதன்றி நமது மதக் கொள்கைகளின்படி விசேஷபுண்ணிய முண்டென்றும், அவர்களரசருக்கு போதித்தார்கள். அந்தப்படி துருக்கரசர் ஷை ஸ்வாமிகளை தூக்கி வரும்படி உத்திரவு கொடுத்துவிட்டார். இது விஷயங்களை சிதம்பரத்திலுள்ள தீக்ஷதர்கள் கேழ்விப்பட்டு இராக்காலத்தில் ஸ்ரீ நடராஜாவைத் தூக்கிக்கொண்டு பொழுது விடியுமுன் கொள்ளடந்தாண்டிவந்து வேளூர் கோவிலுக்குள் வைக்கலாமென வுத்தேசித்தார்கள். அந்தக் கோவிலில் தகுந்த விடமில்லாததால் திருவாரூர் கொண்டுவந்து கமலாம்பாள் கோவிலுக்கு வடபுறமுள்ள உத்திராளுள்மண்டபத்தில் வைத்தார்கள். அந்தவிடம் போதுமானதாக வில்லாததால் முன்பக்கம் சபையுங் கட்டினார்கள். பின்பு ஸ்ரீநடராஜாவின் பூஜை நைவேதனங்களுக்கு ஸ்ரீதியாகராஜா சொத்தில் வீதங்கொடுக்கும்படி அரசன்பேரில் ஆணையிட்டு மறித்தார்கள். இதுவிஷயங்களைக் கேழ்விப்பட்ட தஞ்சையரசர் ஸ்ரீநடராஜாவுக்கு 1-வேலிநிலம் சர்வமான்னியமாகக் கொடுத்து ஷை ஸ்வாமி எல்லைவிட்டு எல்லை வந்தபடியாலும், தஞ்சமென்று வந்தவர்களை காக்கவேண்டியது முக்கியமான கடமையாகையாலும், ஸ்ரீநடராஜா திருவாரூரிலிருக்கும் வரையில் ஞூ1-க்கு 500 பொன் வீதங்கொடுத்து வருவதாக வாக்குதத்தஞ்செய்தார். இதற்கு தீக்ஷிதர்கள் சம்மதித்து அரசன் கொடுத்த பொன்களை வாங்கி பூஜை நைவேதனம்நடத்திவந்தார்கள்.

கலியுகம் 4870 ஞூத்தில் யேகோஜிராஜா வம்சத்தில் துளசிமகாராஜா காலத்தில் மண்டபங்களெல்லாம் புதிப்பித்துக்கட்டி கோவிலுக்கு பலவித அலங்காரங்களைச் செய்ததுமன்றி ஷை கோவில்பூஜை நைவேதனங்களுக்கு பின்னு

மனேகசர்வமான்னியங்களும் விட்டார். அவர் ஷெ ஸ்ரீதியாகேசரை பூஜை செய்துவரும் குருக்களென்ற நாயன்மார்களுக்கு 10 வேலிநிலம் சர்வமான்னியமுங் கொடுத்தார். பிறகு நந்தனவருடத்தில் ஆர்க்காட்டில் அரசுபுரிந்த சந்தாசாயப்பு தஞ்சைராஜா கப்பணஞ்செலுத்தவில்லையென்பதாக தன் படைகளைக்கொண்டு தஞ்சை சமஸ்தானத்தில் கொள்ளையடிக்கும்படி யுத்திரவு செய்தார். அவருத்திரவுப்படி துருக்கர் படைகள் கொள்ளடந்தாண்டி வந்துவிட்டதை துளசிமகாராஜா கேழ்விப்பட்டு தஞ்சைஜில்லா ஸ்வாமிகளையெல்லாம் அரண்மனைக்குத்தூக்கிவரும்படிக்கு ஜனங்களனைவருக்கும் பறையறிவித்தார். தஞ்சைராஜன் டில்லிபாக்ஷாவின் பெண்ணை கல்லியாணஞ் செய்திருக்கிற விபரம் துருக்கர் படைகளுக்குத் தெரிந்ததின்பேரில் கப்பணம் வாங்காதிருந்தார்கள். அந்தப்பெண் இறந்துவிட்டபடியால், துருக்கர் படைகள் தஞ்சை சமஸ்தானத்தில் கொள்ளையடிக்க வாரம்பித்ததைத் தெரிந்து, தஞ்சைராஜா துருக்கருடன் போர்செய்ய இஷ்டமில்லாமல் சமாதானம்பேசி ளூ01-க்கு ஒருலக்ஷம் விராகன் கப்பணங்கட்டி வருவதாக சீட்டு எழுதிக்கொடுத்தார். இதற்கும் நவாப் சம்மதிக்காமல் பொன் ஜாஸ்தி கொடுக்க இஷடமில்லாவிட்டால் துருக்கர் படைகளுக்கு குடியிருக்க விடமாவது கொடுக்க வேண்டுமெனக்கேட்டார். அந்தப்படி திருவாரூருக்கு கிழக்கேயுள்ள அடியக்க மங்கல முதல் நாகூர் வரையிலும் தெற்கே கீழ்வேளூர் மாகாணம் தேவூர் கிள்ளுகுடி பாலகுறிச்சி சம்போ மகாதேவி வரையிலுமுள்ள 277 கிராமங்களையும் துருக்கர்களுக்குக் கொடுத்து விட்டார். ஷெ கிராமங்களிலுள்ள குடிகள் வரிகள்கொடுக்கவில்லையென்றும், வரி கொடுக்காதபடி தஞ்சைராஜா உத்திரவு செய்திருப்பதாகவும் ஆர்காடு நவாப்பிடஞ் சொல்லி

மித்திரபேதஞ் செய்துவிட்டார்கள். உடனே நவாப் தனது குதிரைப் படைகளை தஞ்சை சமஸ்தானத்துக்கனுப்பி ஏழைகளை விட்டுவிட்டு எதிர்த்தோரைவெட்டி பொன் முதலியவற்றைக்கொள்ளையடித்து வரும்படியுத்திரவுசெய்துவிட்டார். அந்தப்படி துருக்க ராணுவப்படைகள் மிகுந்த ஆரவாரத்துடன் வருவதைக்கண்டு பயந்த தீக்ஷிதர்கள் தஞ்சாவூருக்கு ஓடிவந்து குதிரை பட்டாளங்கள் வரும் விபரங்களைச்சொன்னார்கள். அரசன் முன்போலவே ஸ்ரீ தியாகராஜா ஸ்ரீநடராஜா முதலிய ஸ்வாமிகளை தனது அரண்மனைக்கு எடுத்து வரும்படிக்கு| உத்திரவனுப்பினதுமன்றி தனது கோட்டையில் பலமான காவல் வைத்தார். தன்னுடைய ஸமஸ்தானத்திலுள்ள மற்ற ஸ்வாமிகளை ஆங்காங்கே பத்திரம் பண்ணி வைக்கும்படி தூதர்களையனுப்பி பறையறிவித்தார். ஸ்ரீநடராஜாவையும் ஸ்ரீதியாகராஜாவையும் தஞ்சாவூருக்குக்கொண்டு போவதற்காக நீடாமங்கலம் வரையில் வந்துவிட்டார்கள். இதற்குள் துருக்கர் படைகள் மாயவரம் கும்பகோணம் திருவையாறு தஞ்சாவூர் முதலிய விடங்களுக்கு வந்துவிட்டதாக கேழ்விப்பட்டதின்பேரில் தஞ்சாவூருக்கு கொண்டு போகவாவது திருப்பிக்கொண்டு போகவாவது மார்க்கமில்லாமல் தெற்குநோக்கிச்சென்று திருப்பெருந்துறை கொண்டுபோய் சேர்த்தார்கள். அந்தக்கோவில் தம்பிரான் ஷை ஸ்வாமிகளின் பூஜை தங்கிப்போன 3 நாட்காலங்களும் நடத்தும்படி சகல சாமான்களும் கொடுத்ததுமன்றி அவ்வூரிலிருந்த மற்ற 3 நாட்களிலும் பூஜை நைவேதன முதலியன குறைவர நடக்கும்படி போதுமான சாமான்கள் கொடுத்தார். இதற்குள் குதிரைப்பட்டாளங்கள் கிராமங்களையெல்லாங்கொள்ளையடித்துக்கொண்டும் குடிசைகளையெல்லாம் கொளுத்திக்கொண்டும் தெற்கே நோக்கி வருவதைக் கேழ்விப்ப

ட்ட தீக்ஷிதர் முதலியவர்கள் ஷை இரண்டு ஸ்வாமிகளை யுந் தூக்கிக்கொண்டு தெற்கே காடுகளில் நுழைந்து ஓடினார்கள். ஒரு புளியந்தோப்பைக் கண்டு அத்தோப்பில் பெரிய பொந்துள்ள இரண்டு புளியமரங்களில் இரண்டு ஸ்வாமிகளையும் வைத்து மூடிவைத்து ஒரு குருக்களையும் ஒருதீக்ஷிதரையும் காவல் வைத்துவிட்டு மற்றவர்கள் அத்தோப்புக்கு கூப்பிடுதூரமுள்ள ஒரு குக்கிராமத்துக்குவந்து இளைப்பாரியிருந்தார்கள். ஷை குருக்களும் தீக்ஷிதரும் அன்னபானுதிகளில்லாமல் பட்டினி கிடந்தார்கள். மறுநாட்காலையில் குதிரைப் படைவீரர் வருவதாகக் கேழ்விப்பட்டு ஷை குக்கிராமத்திலிருந்த திருவாரூர் ஜனங்கள் அவ்விடமுள்ள ஓர் பெரிய ஆலமரத்திலேறிப் பார்த்தார்கள். காளிசின்னம் தாரை முதலிய வாத்தியங்களுடன் குதிரைப் பட்டாளங்கள் வந்துவிட்டன. அவரவர்கள் உயிர்த்தப்பித்துக்கொள்ள பலவிடங்களிலொளிந்து கொண்டார்கள். ஸ்ரீதியாகேசரைத் தூக்கிவந்த வீழிப்பிராமணர்கள் ஒடிமறைய விடமில்லாமல் அங்கிருந்த ஓர் மதகுக்குள் புகுந்து கொண்டார்கள். இவர்களை துருக்கர் படைகள் கண்டுபிடித்து தூக்கிவந்த ஸ்வாமிகளிருக்கு மிடத்தைக் கேட்டுஞ் சொல்லாததால் அவர்களனைவரையுங் கொன்றுவிட்டார்கள் ஷை குருக்களும் தீக்ஷிதரும் ஒரு பெரிய புளியமரத்தின் கிளையிலேறியிருந்து மேற்கண்டபடி வீழிப்பிராமணர்கள் கொலைசெய்யப்பட்டதைப்பார்த்து மிகுந்த திகிலடைந்திருந்தார்கள். இவர்கள் பால் பழங்களைச் சாப்பிட்டுக்கொண்டு வருந்துவதைப்பார்த்து சிவபெருமான் மனதிரங்கி அவர்கள் சொற்பனத்தில் தோன்றி நீங்கள் உங்களூர் போய் சேர்ந்து என்னையாத்மார்த்தமாக பூஜை செய்யுங்கள் எனச்சொன்னார். உடனே இவர்களிருவரும் தங்களுயிரைக்கையில் பிடித்துக்கொண்டு இராக்

காலத்தில் வெளிப்பட்டு காட்டுமோர்க்கமாக வோடி திருவா ரூர் வந்துசேர்ந்து நடந்த விருத்தாந்தங்களைச் சொன்னது மன்றி இது விபரங்களை தஞ்சை யரசனுக்குந் தெரிவித் தார்கள்.

துருக்கருடைய கொள்ளையுங் கலகங்களும் உலாந்தா க்காரர்களுக்கு தங்கள் ஸ்திரீகள் மூலமாய்த் தெரியவந்த தின் பேரில் மிகுந்த கவலைகொண்டும், தஞ்சை ராஜருக்கு தயிரியமில்லாததால் துஷ்டர்களை வெட்டயாதொரு பிர யத்தினமுஞ் செய்யாதிருந்தாரென்று ஆச்சரியப்பட்டும் இக் கலக முதலியவற்றை தங்களிடந் தெரிவிக்காதகாரண த்தைக் கேட்டார்கள். அதற்கு பதில் சொல்லமுடியாமல் துருக்கர்படைகளை யெதிர்த்து சண்டைசெய்ய ஒத்தாசை செய்யவேண்டுமெனக் கேட்டார். உலாந்தாக்காரரும் டச் சுக்காரரும் தஞ்சையரசர் கேட்டபடி யுதவிசெய்வதாக வொப்புக்கொண்டார்கள். ஆர்க்காடு நவாப் இங்கிலீஷ்க்கா ரரிடம் கடன் வாங்கியிருப்பதாகவும், அந்தக்கடனைக்கொ டுக்க பணமில்லாததால் தஞ்சை சமஸ்தானத்தில் கொள்ளை யடித்ததாகவுந் தெரிந்தது. தஞ்சையரசருக்கு டேன்ஸ் முதலானவர்கள் ஒத்தாசை செய்வதாகச்சொன்ன விபரம் துருக்கர்படைகளுக்குத் தெரிந்தவுடன் கலகஞ் செய்யாமல் ஓடிப்போய்விட்டார்கள். துருக்கர்களுக்காக கொடுபட்ட கிராமங்களை திருப்பிக்கொடுத்துவிடவேண்டுமென்று கட் டாயப்படுத்தினதின் பேரில் நாகூரைமட்டில் வைத்துக் கொண்டு மற்ற 276 கிராமங்களையும் விட்டுவிட்டார்கள். இந்த கிராமங்களையெல்லாம் உலாந்தக்காரரிடம் கொடுத்து அவர்களே யாளும்படிசெய்தார். இவ்விதம் கொடுபட்டது கலியுகம் 4876-ம் வருடம். துருக்கர் கலகங்களடங்கிய பின் திருவாரூர் மகாஜனங்களால் கோவில்சாமிகளிறங்

சதும் தியாகேசர்காடுகளி லொளிக்கப்பட்ட விபரங்களும் அரசருக்கு தெரியவந்ததின்பேரில் அவர் ஸ்வாமியைக்கண் டுபிடித்து கொண்வரவேண்டுமென ஆக்ஞாபித்தார். காடு களெல்லாம் வீடுகளாகியும், வீடுகளெல்லாம் காடுகளாகி யும் வயதில் பெரியோர்களிறந்தும், போய்விட்டபடியால் ஸ்வாமிகள் வைத்தவிடமுந் தெரியவில்லை. ஓர் சிறு கிரா மத்து வாலீவர்கள் அம்பல்புளி தியாகப்புளியெனப் பெய ரிட்டுச் சொல்லிக்கொண்டிருந்ததைக் கேட்டு அந்தபுளிய மரங்களைச்சோதிக்க அந்தஸ்வாமிகளிருந்தன. ஷை ஸ்வாமி களிருந்த பொன்பேத்தி கிராமத்தார்கள் ஷை ஸ்வாமிகளை யெடுத்துப்போகக் கூடாதெனத் தடைசெய்துவிட்டார்கள். இது விபரங்களை யரசனுக்கு தெரிவித்தவுடன் அவர் அவ் வூர் தலைக்குடிகளைத் தருவித்து உங்களுக்கு வேண்டிய தைக் கேளுங்கள், தருகிறோமென்றார். அவர்கள் யாதொரு வெகுமதியுங் கேட்காமல் ஷை ஸ்வாமிகளுக்கு தங்கள் குலத்தவர்கள் தர்மர்த்தாவாக விருக்வேண்டுமெனக் கேட் டுக்கொண்டார்கள். அந்தப்படி ஸ்ரீதியாகேசர் கோவில்தர் மகர்த்தாவான துருவாசரிஷி மடத்துக்கு ஆதீனகர்த்தா ஸ்தானத்தை கொடுத்துவிட சம்மதித்ததின்பேரில் அந்த கிராமத்து வேளாளர்கள் தங்கள் குலத்திலிருந்த ஒரு சிறு பையனை ஷை மடம் தர்மகர்த்தாவாக விருக்கும்படி கொடுத்துவிட்டார்கள் அந்த பையனை யழைத்துப்போய் சை வாகமப்படி தீக்ஷைகள்செய்து பூநூல் போட்டு ஷை ஆதீனத் துக்குரிய விதிகளின்படி நடக்கச் செய்ததுமன்றி முன்ன ந்த மடத்திலிருந்த ஆதீனகர்த்தர் ஸ்ரீதியாகேசனைத்தேடாதி ருந்து விட்டபடியால் அவர் ஷை சிறு பையனுக்கு பரிசா ரகனுக விருக்கவேண்டுமென்று முத்திரவு செய்தார். பின்பு மேற்சொன்ன புளியம் பொந்திலிருந்த இரண்டுஸ்வாமி

களை யுமெடுத்துக் கொண்டு திருப்பெருந்துறை யென்னும் ஆவடையார் கோவிலுக்குக் கொண்டுபோய் அக்கினிவளர்த்தி ஓம வேள்விகள் செய்துஸ்வாமிகளை துவககஞ் செய்ததின்பேரில் சந்தோஷமுகங்கள் தோன்றின. விசேஷ அபிஷேகங்கள் செய்ததுமன்றி அதுவரையில் தங்கிப்போன காலங்களுக்கெல்லாம் நைவேதனம் ஆராதனை முதலியன சிறப்பாய் நடத்தினார்கள். பின்பு ருஜாவாக்கின்படிவேளாளச்சிறுவரை யழைத்துவந்து பிராமணச் சடங்கின்படி பூநூல் போட்டு முனிவர்போல் அலங்கரித்து ஸ்ரீதியாகேசர் சன்னிதியில் திருமேடையிலிருக்கச் செய்து கழுத்தில் பணிமாலை போட்டு சிரசில்பரிவட்டம்கட்டி பெரியமடம் தூருவாசரொனப் பெயரிட்டார்கள். அரசன் விசேஷ காணிக்கைகளை யனுப்பினதுமன்றிஆராதனை முதலியனவற்றிற்கு வேண்டிய யேற்பாடுகள் செய்வதற்காக ஸ்வாமி வருவதற்கு முன் திருவாரூர் போய்ச்சேர்ந்தார். ஷை இரண்டு ஸ்வாமிகளையுந் தூக்கிக்கொண்டு பெரியமடந்துறவி திருவாரூருக்குப்போகும்போது ஐதாாவிகலகத்துக்குப்பயந்து வோடிய திருவாரூர்ஜனங்கள் தியாகப்பெருமானல் லூரில்தங்கியிருந்வர்கள் ஷைஸ்வாமிகள் வருவதைப்பார்த்து மிகவும் சந்தோஷமாகிஅவர்களுங் கூடவேபுறப்பட்டுவந்தார்கள். கபிலைநதி கடந்து வந்ததும் திருவாரூர் கோவில் ஜனங்கள்மேளவாத்தியங்களுடன் எதிர்கொண்டழைத்துசிவபெருமான் திருக்கோயிலுக்குள்சென்றபின் அனேககடங்கல்வைத்து ஓமம்வளர்த்து யாகம்செய்து திருமருந்து சாத்தி விசேஷஅபிஷேகங்கள் செய்து ஆறுகாலம் பூஜை நைவேதனம் ஆராதனைகள் சரிவர நடந்தது துருக்கர்களால் சேதப்படுத்தப்பட்ட தேரும் பழுதுபார்க்கப்பட்டது.

ஷை பெரியமடந்துறவியால் தேரோட்டமுடியவில்லை

யென்பதாக திருவாரூர் மகாஜனங்கள் அரசனிடம் முறையிட்டார்கள். அதன்பேரில் [illegible] ஸ்தி பூமியுள்ளவர் யாவரோ [illegible] கலத்திலிருந்த சொக்கப்பமுதலி[illegible]க்தேர்ந்து அவர் தேரோட்டி வைக்கு[illegible]தார். இந்த முதலியார் அரசனுத்திரவுப்படி துன்முகி வருடம் திருவாரூர் வந்து தேர்வேலை எப்படிச் செய்கிறதென்று ஆலோஜித்தார்? சிவபெருமான் குருக்கள்ரூபமாக அவர் கினவிற்றோன்றி முகினிமரம் அச்சுக்கு வுரித்தானதென்றும் அதுவே தான் விரும்பி வசிக்கத்தக்கதென்றுஞ் சொன்னார். அந்தப்படி அந்த மரத்தைத் தருவித்து அச்சுப் போட்டு தேரோட்டினார். இதைச்கேள்பட்டு ரூஜாவுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாகி முதலியாருக்கு விசேஷசன்மானங்கள் செய்தார்.

அர்த்தஜாமகட்டளைக்கு விடப்பட்டிருந்த 50 வேலிநிலமும் குருக்கருக்கு கொடுக்கப்பட்ட கிராமங்களுடன் சேர்ந்துவிட்டதால் அந்த நிலங்களின் பேரில் கப்பண வீதித்தொகை வசூலித்து வந்தார்கள். இது விபரம் அரசனுக்குத் தெரிவித்தவுடன் சிலநிலங்களை சுரோத்திரியமாக ஸ்ரீதியாகேசருக்குக் கொடுத்தார். நாகப்பட்டணத்திலிருந்து வுலாந்தாக்காரர் பெரியகம்பெனியாகச் சேர்ந்து வியாபாரஞ் செய்து வந்தார்கள். அவர்களிடம் கடன் வாங்கியிருந்த ஆர்க்காடு நவாப்பு தன் கடனைகொடுக்கமுடியாமல் தனக்கிருந்த நாகூரை உலாந்தா கம்பெனியாரிடங் கொடுத்துவிட்டார். இங்கிலீஷ் கம்பெனியார் ஆர்க்காடு சமஸ்தானத்தை கைப்பற்றியவிபரந் தெரிந்து ஸ்ரீநடரூஜாவை திரும்ப சிதம்பரங்கொணடு போய்விட்டார்கள். தஞ்சை சமஸ்தானத்துக்கு இருபக்கத்திலும் அதாவது மேற்கிலும் வடபக்கத்திலும் இங்கிலீஷ்க்காரர் தேசமாள வந்துவிட்டபடி

யால் துருக்கருக்கு தோப்பா கொடுக்கக்கூடாதென தடைசெய்து தஞ்சைசமஸ்தான வரும்படியில் எட்டிலொருபாகம் கப்பணஞ்செலுத்த வேண்டுமெனக் கேட்டார்கள். தஞ்சையரசன் வரும்படிகணக்கிட முடியாதென்றும் துருக்கவரசருக்குக் கொடுத்துவந்ததுபோல் வருடம் 1க்கு ஒரு லெட்சம் விராகன் கப்பணஞ் செலுத்திவருவதாகவும் சீட்டு எழுதிக்கொடுத்தார். துளசிராஜன் சந்ததியன்னியிலிறந்துவிட்டபடியால் இவர் சித்தப்பன் மகன் அமரசிங்குக்கு முடிசூடினார்கள். இவர் 12 வருஷம் இராஜ்ஜிய பரிபாலனஞ் செய்ததில் தேசமெங்கும் கெடுதியாயிருந்தது. அதனால்முன்னரசர் துளசிராஜாவின் மச்சினிபிள்ளையை மஞ்சனபுத்திரனாக எடுத்துக்கொண்டு ராஜரீகஞ்செய்யப்போவதாக சபையார் சொல்லிக்கொண்டார்கள். இந்தவிஷயத்தை கேள்விபட்ட ஐரோப்பிய பாதிரிமார் ராஜ்ஜியத்தை பாதுகாப்பதற்கு தங்களுக்கு பாத்தியமிருக்கிற தென்றும், அமரசிங்குராஜன் சமர்த்தனல்லவென்றும், அவர் மகன் சரபோஜி மைனராக விருப்பதால் அவர் மேஜராகிறவரையில் கம்பெனியார் ராஜ்ஜியத்தை யாளவேண்டுமென்றும், கலகஞ்செய்துவிட்டார்கள். இந்த இடுக்குக்கண்ட இங்கிலீஷ் கம்பெனியார் தோப்பா பண முழுவதும் கணக்குப்படி கொடுத்துவிட வேண்டுமெனக் கண்டிந்துக்கேட்டார்கள். அமரசிங்கு ராஜன் தன் சமஸ்தானம் வெள்ளப்பாழினால் சேதப்பட்டுவிட்டபடியால் ராஜாங்கசெலவுகளுக்கே பணமில்லையென்றும்' அடுத்தவருடஞ் சேர்த்து செலுத்திவிடுவதாகவும்' கம்பெனியாருக்கு எழுதியனுப்பினார். அரசன் சொன்னது அபத்தமென்றும் கமிஷனர் நியமித்து தேசமெங்கும் பார்க்கச்செய்யவேண்டு மென்றும், அமெரிக்கா பாதிரிமார்கள் கம்பெனிக்கு எழுதிவிட்டார்

கள். அது விஷயத்தைப்பற்றி விசாரித்துவரும்படி கமிஷனர்கள் அனுப்பப்பட்டார்கள். அவர்களை பாதிரிமார்கள் தங்கள் வாசஸ்தானத்தில் வைத்துக்கொண்டு தஞ்சை சமஸ்தானம் ஐந்து சுபையும் ஐந்தாறு லெட்சம் பொன்னுக்கு மேல்வரும்படி கிடைக்கக் கூடுமென் கணக்கெடுத்து எழுதிவிட்டார்கள். இறந்த துளசிராஜாவுக்கு சரபோஜியை ஸ்வீகாரபுத்திரனுகச் செய்துவிட்டால் எவ்வித கலகங்களுக்கும் இடமில்லையென்றும், பங்காள நீதி சபையில் இது விபரத்தைத் தெரிவித்து உத்திரவு தருவித்துவிடுவதாகவும் பாதிரியார்கள் சொன்னார்கள். இதைக்கேட்ட மைனர் சரபோஜியின் தாயார் சஞ்சலம் நீங்கியிருந்தாள். இது விஷயங்களை முடிவுசெய்வதற்கு சென்னை கவர்னரை தஞ்சாவூருக்கு வரவழைப்பதாகவும், கவர்னர் போவதற்கும் வருவதற்குமுள்ள செலவுகளை கம்பெனியாரை கொடுக்கச் செய்வதாகவுஞ் சொன்னார்கள். கம்பெனியார் தோப்பாப் பணத்தை யுடனே கொடுத்துவிட வேண்டுமென கண்டித்துக் கேட்டார்கள். அமரசிங்குருஜா தோப்பாப்பணங் கொடுக்க வகையற்றவராகி தன் சமஸ்தானம் 5. சுபைகளில் மன்னார்குடி மாயவரம் இந்த இரண்டு சுபைகளையும் ஒத்தி போலனுபவிக்கும்படி கம்பெனியாரிடம் கொடுத்துவிட்டார்.

மன்னார்குடிசுபை நாகப்பட்டணம் மேன்துரை விசாரணையிலும் மாயவரம் சுபை பஞ்சகுப்பம் கிராண்டுதுரை விசாரணையிலும் விடப்பட்டது. சரபோஜிருஜாவுக்கு 18வயதாகிறவரையில் பெங்காள சட்டசபையில் வழக்கு சொல்லிக்கொள்ள முடியாமல் போய்விட்டது. சரபோஜிக்கு பதினெட்டு வயது வந்தவுடனே பாதிரிமார்கள். இவருடன் கலந்துகொண்டு சமஸ்தான முழுவதும் கம்பெனியாரோ

ஆளும்படிக்குச் செய்து வருடம் 1-க்கு கூடுதலாகும் 5 லட்சம் விராகன் பொன்னில் இரண்டு லட்சம் சரபோஜிக்கும், ஒரு லெட்சம் தருமச்செலவுகளுக்கும், கொடுத்து விடுகிறதென்ற யேற்பாடுசெய்து கொள்வது சிலாக்கியமானதென்றும், அதற்கு கம்பெனியார் சம்மதிக்கும்படி செய்து விடுவதாகவுஞ் சொன்னதுமன்றி ஷை ராஜாவுக்கு சிநேகமானவர்களைக் கொண்டுஞ் சொல்லி சம்மதிக்கும்படியான யேற்பாடுகள் செய்தார்கள். அந்தப்படி சரபோஜி சம்மதித்து கவுல் கொடுப்பதாக ஒப்புக்கொண்டுவிட்டார். இது விஷயத்தைப்பற்றி அமரசிங்குராஜாவுக்கு எழுதிக்கேட்டதில் தனக்கு சம்மதியில்லையெனச் சொல்லிவிட்டார்.

இதன் பேரில் இங்கிலீஷ்கம்பெனியாருக்கு இறை வசூலிக்க பாத்தியமிருப்பதால் பட்டஞ் சூட்டும்படியான பாத்தியமும் தங்களுக்கிருக்கிற தென்றும் சரபோஜி ராஜாவே பட்டத்துக்கு உரியவரென்றும் சென்னை கவர்னர் தீர்ப்பு செய்துவிட்டார். இது விபரத்தை பாதிரிமார் சரபோஜிக்கு சொன்னவுடன் அளவுக்கடங்காத சந்தோஷமுண்டாகி கம்பெனியார் தஞ்சை சமஸ்தானத்தை யாளுவதில் தனக்கு யாதொரு ஆக்ஷேபனையுமில்லை சமஸ்தானவரும்படியில் 5ல் 2 பாகம் எனக்கு கப்பணமாக கொடுத்தால் போதுமானது ஆனல் அமரசிங்குமட்டில் நகரை விட்டு நீங்கி விடச்செய்ய வேணுமென்றார், பாதிரிமார் இதைக் கேட்டு ராஜன் சொல்வது உறுதியானதென்று நம்பி உங்களிஷ்டப்படிச் செய்து விடுகிறோம். சென்னைகவர்னர் முடி சூட்டுவதற்கு தஞ்சாவூர் வருவார். அவர் வந்தவுடன் இப்போது பேசியபடி கவுல் கொடுத்துவிடவேண்டுமெனச் சொன்னார்கள்.

மேற்கண்டபடி தஞ்சைராஜன் சரபோஜி யிடத்தில் கவுல் பெற்றுக்கொண்டு முடி சூட்டிவைக்கும்படி பங்காள

கவர்ண்மெண்டார் உத்திரவு செய்தவுடன் கலியுகாதி 4899ம் வருடத்தில் சென்னை கவர்னர் சரபோஜி ராஜாவுக்கு முடி சூட்டுவதற்காக தஞ்சாவூர்வந்து சேர்ந்து முறிச்சீட்டு எழுதிக் கொடுக்கும்படி கேட்டார். அப்போது சற்ரேஜி யென்ற மந்திரி சரபோஜியிடம் வந்து தஞ்சை சமஸ்தான முழுவதுங் கொடுத்துவிட்டு முடிதரித்திருப்பதில் என்ன பிரயோஜனமென்றுசொல்லி வருத்தப்பட்டார். இதைக்கேட்டவுடன் ருஜாவுக்கு அன்ன மாகார மில்லாமல் மனவேதனையால் வயிற்றளவு முண்டாயிற்று. அனேக வயித்தியர்கள் வந்து அவிழ்தங்கள் கொடுத்தும் சொஸ்தமாகவில்லை சென்னை கவர்னர் சிலநாள் காத்திருந்தும் அரசனுக்குற்றவியாதி சொஸ்தமாகவில்லை யெனத் தெரிந்து இங்கிலீஷ் டாக்டர்களைக் கொண்டு நாதுபார்க்கச் செய்தார். அவர்கள் பார்வையிட்டு அரசனுக்கு தேகத்தில் வியாதியில்லை மனோ வியாதியால்தான் சீக்கு ஏற்பட்டிருக்கிறது மனந் திருப்தியாகும்படி செய்துவிட்டால் வியாதி விலகிவிடுமெனச் சொன்னார்கள். அதன் பேரில் கவர்னர் அரசனிடஞ் சென்று உன் மனதில் என்ன வருத்தமிருக்கிறது அதைச சொல்ல வேண்டு மெனக் கேட்டார். அதற்கு சரயோஜி என்னுடைய இராஜ்ஜிய முழுவதும் கம்பெனியாரிடங் கொடுத்து விட்டுமுண்டைகள் போல முடிதரித்திருப்பதில் என்ன பிரயோஜனம் எனச் சொன்னார். கவர்னர் அரசன் அபிப்பிராய மின்னதென்றுதெரிவித்தால் அதன்படி நடந்து கொள்ளுகிறேமெனச் சொன்னதின்பேரில் தஞ்சாவூர் பட்டணத்துக்கு 5 கூப்பிடும் தூரத்துக்குள்பட்ட நாடுகள் நான்கு புறத்திலும் தன் வசமிருக்கவேண்டு மென்றும் தனது நேரான விசாரணையிலிருந்து வருகிற அன்னமடம் கோவில் சத்திரம் அவைகளுக் கேர்ப்பட்ட பூஸ்திதிகள் தலியன தன்வசமே யிருக்க வேண்டுமென்றும் தான் வெளியே புறப்பட்டு போகுங் காலங்களில் தனக்குச் செய்ய வேண்டிய மரியாதைகள் செய்யவேண்டியதென்றும் அதிர் வேட்டுகள் போடவேண்டியதென்றும், தனது அரண்மனையிலு

ள்ள குதிரை ய[illegible]வேண்டிய புல் எல்லாநதிக்கரையிலும் தனக்கு விட்டுவிட வேண்டுமென்றும், தனது சமஸ்தானத்திலுள்ள சகல தேவாலயங்கள் தருமசாலைகள் முதலியனவற்றில் நடத்தப்பட்டு வந்த தருமங்கள் மாமூல் வழக்கப்படி நடத்தபபட்டு வரவேண்டுமென்றும், மற்ற தேசத்தை கிராமமாக பரிபாலனஞ் செய்து வரும்படியில் ஐந்தில் இரண்டு பாகம் தன்னுடைய அரண்மனைக்கு அனுப்பிவிட வேண்டியதுமன்றி ஐந்திலொரு பாகம் தருமச் செலவுகளுக்காக கொடுக்க வேண்டியதென்றும், மற்ற இரண்டு பாகத்தையும் சப்பணத்துக்காவும் விசாரணை செய்வதற்காகவும் எடுத்துக் கொள்ளலா மென்றும், இந்தப்படி முறிச்சிட்டு எழுதிக் கொடுப்பதாகவுஞ் சொன்னார். இந்தப்படிக்கே கவர்னரும் சம்மதித்து ஐப்பிசி மாதம் 10ம் தேதி கவுல்ச்சிட்டு கம்பெனிக்கு சரபோஜி ராஜா எழுதிக் கொடுத்துவிட்டார். இதைக் கேழ்விப்பட்ட அமரசிங்கு மகாராஜா ஆராத்துயரமடைந்து மத்தியார்ச்சுனம் வந்துவிட்டார். கார்த்திகை மாதத்தில் சென்னை கவர்னரால் சரபோஜிக்கு முடிசூட்டப்பட்டது.

இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் 1800ளு ஜூலை மாத முதல் தஞ்சை சமஸ்தானத்தை யாள வாரம்பித்தார்கள். ஹாரீஸ்துரை வந்து தீர்வைகளேற்படுத்தினார். துண்டுப் பொன் விராகன் துண்டு இவைகளை வசூலிக்கக்கூடாதென வுத்திரவு செய்தார். குத்துக்கொல்லரிடமுள்ள கணக்குகளை வாங்கி அவைகளி லேற்பட்ட திட்டப்படி தேவாலயங்களுக்கு தவக்க மன்னியில் கொடுத்துவரும்படி திட்டஞ்செய்தார். கம்பெனியார் காலத்தில் தேவாலயதர்மங்களெல்லாம் சரியாக நடந்து வந்தன. கம்பெனியாரா லேற்பட்ட கணக்கின்படி திருவாரூர் தேவஸ்தானத்துக்கு வருடம் 1க்கு ஆருயிரம் பொன் மோகனித்தொகை கொடுபட்டுவந்தது. புஞ்சை நஞ்சை நிலங்கள் ஆயிரம் வேலி சர்வமான்னியமாக விடப்பட்டது மன்றி கோவில் ஐந்து வேலி குளம் ஐந்துவேலிசெங்கழுநீரோடை ஐந்துவேலியும் விடப்பட்டது.

முற்றும்.